MR. SPEAKER : How can the Hon. Minister answer every such question?

SRI K. R. VISWANATHAN : அனாதை மாணவர்களுக்கு கொடுக்கப்படும் மான்யத்தை அதிகப்படுத்தவேண்டுமென்று சர்க்காருக்கு வேண்டுகோள் வந்திருக்கிறதா? அதுபற்றி சர்க்கார் என்ன முடிவு எடுத்திருக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆம். அதுபற்றி கோரிக்கைகள் வந்திருக்கின்றன. இப்பொழுது மாதம் ஒன்றுக்கு ரூபாய் 8 கொடுக்கப்படுகிறது. அக்டோபர் 1–ம்தேதியிலிருந்து ரூபாய் 10 கொடுப்பதாக உத்தரவு போடப்பட்டிருக்கிறது.

SRI K. RAMACHANDRAN : நமது ராஜ்யத்திலே எத்தனை 'ஆர்பனேஜ்கள்' இருக்கின்றன? அவைகளை எத்தனை மாணவர்கள் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள் என்று சொல்ல முடியுமா?

MR. SPEAKER : The hon. Member must put a separate question. A supplementary question must be one pertaining to the main question. The hon. Member is asking a major question.

*Hypnotism and mesmerism*

* 411 *Q.*—SRI M. JAGANNATHAN (on behalf of Sri K. Sattanatha Karayalar) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether hypnotism and mesmerism are used in any of our hospitals in the treatment of patients;

(*b*) if so, what are the diseases treated by these methods; and

(*c*) whether hypnotism is used in maternity cases?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

(*c*) No.

*Harijan Colony Scheme*

* 412 *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா, மாயூரம் தாலூகா, 70–ம் வெ. நத்தம் வட்டம் திருநன்றியூர் நெ. 87 சமுதாய புஞ்சையில் ஹரிஜனங்களுக்கு காலனி திட்டத்தில் வீடுகள் கட்ட வேண்டுகோள் அரசாங்கத்திற்கு வந்ததா?

(ஆ) எப்போது?

(இ) இதற்காக எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டுள்ளது?

(ஈ) எப்போது அத்திட்டம் எடுத்துக்கொள்ளப்படும்?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) *to* (*d*) Do not arise.

22nd September 1958]

SRI M. C. MUTHUKUMARASWAMY: இந்த கிராமம் தர்மபுரி ஆதீனத்திற்குச் சொந்தம். சர்க்கார் இதில் தலையிட்டு வீடுகள் கட்டிக்கொடுப்பது என்றால் ஆதீனம் உதவி செய்வதற்குத் தயாராக இருக்கிறார்கள். ஆகவே, இதில் உடனடியாக நடவடிக்கை எடுத்து அந்தக் கட்டிடங்களைக் கட்டுவதற்கு அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI P. KAKKAN: வீடுகள் கட்டுவதற்கு அந்த இடங்களையெல்லாம் பார்த்து முடிவு செய்யவேண்டியிருக்கிறது. கலெக்டர் அவர்கள் சிபார்சு செய்து அதன்பேரில் ஹரிஜன நல இலாகா டைரக்டர் அவர்கள் வீடுகள் கட்டுவதுபற்றி முடிவு செய்யவேண்டும். கனம் அங்கத்தினர் அவர்கள் இதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தால், அது கவனிக்கப்படும்.

SRI P. JAYARAJ: மாயவரம் தாலுகாவில் ஹரிஜனங்களுக்காக எத்தனை வீடுகள் கட்டிக்கொடுக்கப்படுகின்றன? அவைகள் எங்கே கட்டிக் கொடுக்கப்படுகின்றன என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: அதுபற்றி தனிக் கேள்வி போடவேண்டும்.

*Madras Corporation*

* 413 *Q.*—SRI K. VINAYAKAM: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) when the Madras Corporation Council submitted its Elementary Education Budget to the Government for its approval;

(*b*) whether it has been approved by the Government; and

(*c*) if not, the reasons therefor?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) The Elementary Education budget of the Corporation of Madras for 1958–59 was submitted to Government through the Director of Public Instruction on 11th April 1958.

(*b*) Yes, Sir.

(*c*) Does not arise.

SRI K. VINAYAKAM: Why was approval held up for a long time? Was not the Budget approved only recently, after I gave notice of the question? Are the Government aware that the delay in approving the Budget has held up the execution of several developmental schemes regarding elementary education?

THE HON. SRI C. SUBRAMANIAM: Yes, Sir. This was approved on 13th August 1958. I do agree there has been some delay. I shall look into it.

SRIMATHI T. N. ANANDANAYAKI: எலிமெண்டரி எஜுகேஷன் பட்ஜெட்டிலே ஆயாக்களுக்காக ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்படுகிறது. ஆனால், அரசாங்கம் எங்களுக்கு ஆயாக்களை நியமிப்பதற்கு அதிகாரம் அளிப்பதில்லை. இந்த பட்ஜெட்டிலாவது ஆயாக்களை நியமிப்பதற்கு அதிகாரம் கொடுக்கப்படுமா?

MR. SPEAKER: அதற்கு தனி கேள்வி போடவேண்டும்.